ANNAMALAI UNIVERSITY ISAI TAMIL SERIES–Vol. VIII

# தமிழிசைப்பாடல்கள்

## எட்டாந்தொகுதி

WITH COURAGE AND FAITH

1945

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்து இசைத்தமிழ் வெளியீடு—VIII

## சீகாழி அருணாசலக்கவிராயர்

இயற்றிய

## இராம நாடக

# இசைப்பாடல்கள்

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்து இசைக்கல்லூரி

வீணை ஆசிரியர்

V. S. கோமதிசங்கர ஐயர் அவர்களால்

சுரதாளங்களும்

ஷை பல்கலைக்கழகத்துத் தமிழாசிரியர்

வித்துவான்

மு. அருணாசலம் பிள்ளையவர்களால்

பாடற்குறிப்புக்களும் எழுதப்பெற்று

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தாரால்

திருச்சி யுனைடெட் பிரிண்டர்ஸ் லிமிடெட்டில்

பதிப்பிக்கப்பெற்றன

1945



[ விலை ரூபாய் 3

# உள்ளுறை

மகாமகோபாத்தியாய பண்டிதமணி

திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்கள்

இயற்றியவை

## கடவுள் வாழ்த்து

ஆசிரிய விருத்தம்

பூவார் மணம்போல் உலகமெலாம்
பொருந்தி யியக்கும் பெரும்பொருளே
புனிதம் நிறைந்த வுணர்வுடையோர்
புகழிற் கிடக்கும் புண்ணியனே

நாவார் கலைகள் துணிபொருளா
நவில்நா யகனே மெய்யுணர்வின்
நலமார் வடிவே யகவிருளை
நலிந்து விளங்கி நல்லன்பர்

தூவார் உளத்திற் சுடர்விளக்கே
துகளற் றொடுங்கித் தமைமறந்து
துய்ப்பார்க் கினிய செழுந்தேனே
தோன்றாத் துணையே அறுவரெனும்

மேவார் தமைச்செற் றுளந்தெளிந்தோர்
வினைமா சறுக்கும் மெய்ப்பொருளே
விரும்பிப் பணியும் எம்மையருள்
வெள்ளத் தியைத்துக் காத்தருளே.

## அண்ணாமலைப் பல்கலைக்கழக வாழ்த்து

கட்டளைக் கலித்துறை

கண்ணார் மணியிற் புரப்போ ரெனும்பொருட் கார்பொழிந்த
தண்ணார் நிதிநீர்ச் செழிப்பிற் கலைப்பயிர் தான்வளர்க்கும்
அண்ணா மலைப்பல் கலைக்கழ கப்பே ரணிநிலையம்
விண்ணார் புகழொடு நாளுநா ளோங்கி விளங்குகவே.

அண்ணாமலைப் பல்கலைக்கழகம் நிறுவிய
செட்டி நாட்டரசர்
உயர்திரு. டாக்டர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார்





**உருவச் சிறப்பு**

ஊக்கம் உறுதி உணர்ச்சி யருஞ்செயலின்
ஆக்கம் அறம்புகழன் பாண்மைமுதல்—நீக்கமறக்
காண்டற் கமைந்த கவினுரு அண்ணாமலைமன்
ஆண்டகையின் நல்லுருவ மாம்.

மகாமகோபாத்தியாய—பண்டிதமணி
**மு. கதிரேசச் செட்டியார்.**

மகாமகோபாத்தியாய—பண்டிதமணி

திரு. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் கூறிய

## வாழ்த்து

சீர்மலி கொடையால் அறிவினால் ஆற்றுஞ்
செயற்கருஞ் செயலினால் உலகிற்
பேர்மலி புகழாற் பல்கலைக் கழகம்
நிறுவிய பெருமையாற் சிறந்தோன்
ஏர்மலி தருநல் இசைத்தமிழ் வளர்க்கும்
ஏந்தல்நம் செட்டிநாட் டரசாம்
நார்மலி யுளத்தண் ணாமலை வள்ளல்
நலமுற நீடுவா ழியவே.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்துத்
தமிழ் ஆராய்ச்சிப் பகுதித் தலைவர்
மகா மகோபாத்தியாய பண்டிதமணி
திரு. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் எழுதிய

# முகவுரை

தமிழிசை வளர்ச்சி குறித்துச் செட்டிநாட்டரசரவர்களின் ஆதரவில் அண்ணாமலைப் பல்கலைக்கழக முகமாக வெளியிடப் பெற்று வரும் இசைத்தமிழ் வெளியீடுகளுள் இஃது எட்டாந் தொகுதியாகும். இதன்கண் சீகாழி அருணாசலக் கவிராயர் அவர்கள் இயற்றிய இராம நாடகக் கீர்த்தனைகள் ஐம்பது அடங்கியுள்ளன. கவிராயர் அவர்கள் இயற்றிய கீர்த்தனைகள் பலவாயினும் அவற்றுள் இதன்கண் அடங்கிய ஐம்பது உருப்படிகளும் சரித்திரப் பகுதிக்கே அன்றி இசையரங்குகளில் கேட்போர்க்கு இனிமை பயக்கும்படி சிறந்த இசைவளத்துடன் பாடுதற்கேற்றவாறு ஆராய்ந்து தொகுக்கப்பட்டனவாகும். இக்கீர்த்தனைகள் சொற்பொருள் வளஞ் செறிந்து இசையமைப்பிற்குப் பெரிதும் இயைந்து விளங்குவனவாம். பலவகைச் சுவைகளுக்கும் நிலையமாகவுள்ள இராம சரித்திரத்தின் தகுதிக்கு இவ் இசைப் பாடல்கள் மிகவும் பொருந்தியிருத்தல் அறிஞர் உள்ளத்தை இன்புறுத்துவதாகும். மக்களால் பலகாலும் அறியப்பட்டுள்ள ஒரு சிறந்த வரலாற்றைக் குறித்து வெளிப்படும் இசைப் பாடல்கள் இசையாகிய தேனோடு கலந்து பொருள் நல நுகர்ச்சியில் ஈடுபடுத்தும் என்பது ஒருதலை. இதற்கு எடுத்துக்காட்டாக "அன்னை ஜானகி" என்ற பூபாள இராகக் கீர்த்தனையும், "ஆரோ, இவராரோ" என்ற பைரவி இராகக் கீர்த்தனையும் "எப்படி மனம்" என்ற உசேனி இராகக் கீர்த்தனையும், "ஏன் பள்ளிகொண்டீர் ஐயா" என்ற மோகன இராகக் கீர்த்தனையும், "காணவேணும் லக்ஷம் கண்கள்" என்ற சுருட்டி இராகக் கீர்த்தனையும், "நானே இலக்ஷ்மணன்" என்ற வேகடை இராகக் கீர்த்தனையும், "இராமன் எழுந்தருளினான்." என்ற சாவேரி இராகக் கீர்த்தனையும், "இராமா நீ இந்தக் கோபம் செய்யலாமா" என்ற சகானா இராகக் கீர்த்தனையும்

குறிப்பிடத்தக்கன. இவை இசை இனிமையாலும் சொற்பொருள் இனிமையாலும் பாடுவோர்க்கும் கேட்போர்க்கும் உள்ளம் உருகச்செய்யும் என்பது அனுபவத்தில் உணரத்தக்கது. இத்தகைய இராம நாடக இசைத் தமிழ்ப்பாடல்களைத் தொன்று தொட்டுப் பாடப்பட்டுவரும் முறையினின்று வழுவாமல் திருத்தியமைப்பது நல்லதென்று தோன்றியமையால் அம்முறையில் பயிற்சியுடைய பனங்காட்டூர் திரு. சிவராம பாகவதரவர்களைக்கொண்டு பாடச் செய்து அவர்கள் பாடிய இசையமைப்பில் சுரக் குறிப்புக்கள் எழுதிச் சேர்க்கப்பட்டன. இவற்றுள் 9,16,17,19,33,34 என்னும் எண் உள்ள ஆறு பாடல்களுக்கும் இசையமைத்தவர் அரியக்குடி சங்கீத ரத்நாகரம் ஸ்ரீ இராமாநுஜ ஐயங்காரவர்கள் ஆவர். ஏனைய கீர்த்தனங்களைத் திரு. சிவராம பாகவதரவர்கள் பாடக் கேட்டுச் சுரக் குறிப்புக்களமைத்து அச்சிடுதற்கு ஏற்ற நிலையில் பிரதி யெழுதிக் கொடுத்தும் சுரக் குறிப்புக்களை அச்சுப் பிழை நேராமல் பரிசோதித்தும் உதவியவர்கள் இப்பல்கலைக் கழகத்தின் இசைக் கல்லூரியின் வீணையாசிரியர்களாகிய திரு. V. S. கோமதி சங்கர ஐயரவர்களும் திரு. K. S. நாராயணசாமி ஐயரவர்களுமாவர். இப்பாடல்களின் இலக்கியப் பகுதிகளை அச்சுப் பிழை நேராமல் பரிசோதித்தும், கீர்த்தனைகள் தொடர்ச்சியாக இல்லாமல் இடைவிட்டுத் தொகுக்கப்பட்டனவாதலின் பயில்வார்க்கு வரலாற்றிடம் தோன்ற ஒவ்வொரு கீர்த்தனைகளின் தலைப்பிலும் சுருக்கமான சரித்திரக் குறிப்பு எழுதிச் சேர்த்தும், ஆசிரியர் அருணாசலக் கவிராயரின் வரலாற்றை விளக்கி யெழுதியும் உதவியவர் இப்பல்கலைக் கழகத்துத் தமிழாசிரியர் வித்துவான் திரு. மு. அருணாசலம் பிள்ளையவர்களாவர்.

இப்புத்தகம் அச்சிடப்பட்டு வெளிவருதற்குரிய முயற்சியை மேற்கொண்டு வேண்டுவன செய்தவர் இப்பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளரும், தமிழிசை ஆலோசனைக் குழுவின் அமைச்சரும் ஆகிய பண்டித வித்துவான், திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியாரவர்களாவர்.

எத்துணையோ பல அருஞ்செயல்களை மேற்கொண்டு செய்துவரும் பெருங் கொடை வள்ளலாகிய செட்டிநாட்டரசரவர்கள் தமிழிசை புத்துயிர் பெற்றுச் செழித்து வளர்தலை அச்செயல்களுள் சிறந்ததொன்றாகக்கொண்டு வேண்டும்

உதவிகளைப் புரிந்து வருதல் தமிழகத்தார் நல்வினைப்பய னென்றே கூறலாம். நேர்ந்த இடையூறுகளாகிய களைகளைப் பொறுமையோடு களைந்து தமிழிசைப் பைங்கூழ் செழிக்கத் துணைநிற்கும் அவர்கள் நன்றி பெரிதும் பாராட்டத்தக்கது.

இவ்வெளியீட்டிற்கு மேற்காட்டியபடி பல்லாற்றானும் உதவிபுரிந்த அன்பர்கள் எல்லோர்க்கும் தமிழிசை ஆலோசனைக் குழுத்தலைவன் என்ற முறையில் என் நன்றியறிவைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இன்ப வுணர்ச்சி யினிய தமிழிசைக்கே
என்ப துணர்மின் இருநிலத்தீர்—துன்பொழிவு
வாய்ப்ப முயல்மின் மருளன்மின் மாசிரிய
ஏற்ப விழிமின் எழுந்து.

அண்ணாமலை நகர்,
16—5—1945

இராம நாடகம் இயற்றிய

# அருணாசலக் கவிராயரின் வரலாறு

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழாசிரியர்

வித்துவான் திரு. மு. அருணாசலம் பிள்ளையவர்கள் எழுதியது.

சோழவள நாட்டிலே மாயூரம் என்னுந் தலத்தை யடுத்துள்ள தில்லையாடியென்னுஞ் சிற்றூரில் வேளாளர் மரபிற் பிறந்த நல்லதம்பிப் பிள்ளை யென்பவர் ஒருவர் இருந்தார். அவர் தாம் பிறந்த குடிக்கு ஏற்ப இளமைப் பருவத்தில் சைன மதக் கோட்பாடுடையவராயிருந்து பின்னர்த் திருவருள் வசத்தால் திருநீறு அக்கமாலை புனைந்து சைவராயினர். அவர்க்குக் கற்பொழுக்கத்திற் சிறந்த வள்ளியம்மை யென்னும் பெண்மணி மனைவியாக வாய்த்தனர். இவ்விருவரும் இயற்றிய நல்வினைப் பேற்றால், அவர்கட்கு மகவாகச் சாலிவாகனசகம் 1634—விசய ஆண்டில், இராம நாடக நூலாசிரியராகிய அருணாசலக் கவிராயர் பிறந்தனர். இவர்க்குத் தமையன்மார் மூவர் இருந்தனர். தாய் தந்தையர் இருவரும் அருமருந்தன்ன இக்குழந்தையை அன்போடு பேணி வளர்த்து ஐந்தாவது ஆண்டில் ஐந்தாந்திங்களில் ஐந்தாம் நாளில் தங்குல முறைப்படி தமிழ்ப் பள்ளிக்கு அனுப்பிக் கல்விப் பயிற்சி தொடங்குவித்தனர். "விளையும் பயிர் முளையிலே தெரியும்" என்னும் மூதுரைப்படி, தம் பன்னிரண்டாம் ஆண்டு நிரம்பு முன்னரே அப்பள்ளியிற் பயிற்சி பெறவேண்டிய கல்வியைச் செவ்வனே கற்றுத் திறமையுடையவராயினர். எந்தப் பாடல்களையும் இன்னிசையுடன் பாடிக் கேட்டாரையின்புறுத்தும் இயல்பு இவர்க்கு இளமையிலேயே அமைந்திருந்தது. இங்ஙனம் இவர் இளம் பருவத்தராயிருக்கும்போதே தாய் தந்தையர் இருவரும் இவ்வுலக வாழ்வை நீத்தனர். எதிர்காலத்தில் இவர் நிறைந்த கல்வியும் சிறந்த புகழும் பெற்றுத் திகழ்தலைக் கண்டும் கேட்டுங் களிப்பெய்தும் பேறு அவ்விருவர்க்கும் வாய்க்காமற் போனது மிகவும் வருந்தத் தக்கதேயாகும். ஆகவே, இவரைப் பாதுகாக்கும் பொறுப்புத் தமையன்மாரைச்

சார்ந்ததாயிற்று. ஆயினும் இவர் தமையன்மாருடைய மேற் பார்வையில் இருந்தாரில்லை. விதியின் வழியே மதி செல்லு மென்பது உண்மையாதலால் இவர் தம்முடைய கல்வியை வளர்த்துக்கொள்ளும் அவா மிகுதியால் தாம் பிறந்த ஊர்க்கு அணித்தான தருமபுரத்தில் அமைக்கப்பட்டுள்ள சைவ மடத்தை யடைந்தார். அக்காலத்தில் தென்மொழி வட மொழிப் புலமைகளிற் சிறந்த சைவசீலராகிய தம்பிரான்கள் சிலர் அம்மடத்தில் இருந்தனர். அவர்களை யடுத்துப் பல ஆண்டுகள் அங்கிருந்து, தமிழ் இலக்கிய இலக்கணங்களிலும் சமயநூல்களிலும் தக்க புலமை யெய்தினர். வடமொழி வடுகு என்னும் இரு மொழியிலும் ஓரளவு பயிற்சியும் பெற்றார். இயற்றமிழ்ப் பாடல்களும் இசைத் தமிழ்ப் பாடல்களும் இயற்றுந் திறமையும் இவருக்கு இருந்தது. அம்மடத்திலுள்ள தம்பிரான்கள் பலரும் இவர்க்கு ஒவ்வொரு துறையில் ஆசிரிய ராயினும், அம்பலவாணக் கவிராயரென்னும் பண்டாரச் சந்நிதிகளே இவர்க்குத் தமிழறிவு புகட்டிய நல்லாசிரியராயி னார். இவ்வாறு கல்வி கற்று நிரம்பும் அளவில் இவர்க்கு இருபத்தைந்தாண்டுகளாயின. இவருடைய மதி நுட்பத்தை யும் அறிவுச் செல்வத்தை மேலும் மேலும் வளர்த்துக்கொள் வதில் மிக்கிருந்த ஆர்வத்தையுங் கண்டு, இவர் தம் நல்லாசிரிய ராகிய பண்டாரச் சந்நிதிகள், ஒருநாள் இவரை யழைத்துத் தனியே இருத்திக்கொண்டு "நீர் துறவுபூண்டு இவ்வாதீனத் தின் தலைமைப் பதவியை யேற்றுக்கொள்ள விரும்புகின்றீரா" என்று வினவினார். அதற்கு இவர் "அடிகளே, தாங்கள் இச் சிறியேனையும் ஒரு பொருளாக மதித்து இங்ஙனந் தெரிவித் தால் யான் யாது கூறுவேன். தெய்வப் புலமைத் திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் அறத்துப்பாலில் இல்லறங் கூறிய பின்னரே துறவறங் கூறப்பட்டுளது. பண்டையோர் வரலாறு களிற்பல அங்ஙனமே கேட்கப்படுகின்றன. ஆதலால் அடியே னும் அவ்வான்றோர் சென்ற நெறியிற் செல்ல விரும்புகின் றேன்" என்று விடையளித்தனர். அவ்வுரைகேட்ட பண்டா ரச்சந்நிதிகள், "அப்படியானால் உமது விருப்பப்படி செய்யும்" என்று நல்வாழ்த்துக் கூறியனுப்பினர். பன்னிரண்டு ஆண்டு கள்வரை அச்சைவமடத்திலிருந்து கல்விபயின்று அங்கேயுள்ள எல்லோருடைய அன்பிற்கும் மதிப்பிற்கும் உரியவராகிய இவர் "உவப்பத் தலைக்கூடி யுள்ளப்பிரிதல், அனைத்தே புலவர் தொழில்" என்னும் பொய்யாமொழிக்கிணங்க அவர்கள்பால்

அரிதின் விடைபெற்றுக்கொண்டு தம் ஊர் வந்து சேர்ந்தார். ஆயினும் அப்பொழுதே மணஞ்செய்து இல்வாழ்க்கையில் தலைப்பட்டாரில்லை. அமிழ்தினும் இனிய தமிழ் மொழியின் கண் உள்ள அரிய நூல்கள் பலவற்றையும் இடையறாது படித்துத் தம் புலமையை நிரப்பிக்கொண்டு, முப்பதாம் ஆண்டில், அபிஷேகக்கட்டளைக் கருப்பூர் என்னும் ஊரில் தம் உறவினர் குடும்பத்திற் பிறந்த அறிவுந்திருவும் அமைந்த ஒரு மங்கையை மணந்து இல்லறம் நடத்தத் தொடங்கினர். முப்பது ஆண்டுகள்வரை கல்விப் பொருளையே பெரிதாக மதித்து ஈட்டிய இவர், பின்னர் இல்லறம் இனிது நடைபெறுதற்குச் செல்வப் பொருள் இன்றியமையாதது என்பதையுணர்ந்து காசுக்கடையொன்று வைத்து அதனால் வாழ்க்கைக்கு வேண்டும் பொருளை யீட்டி வந்தார்.

இவருடைய கல்வியறிவு நாளுக்கு நாள் பிறைமதிபோல் வளர்ந்து பின்னொரு காலத்தில் தமிழ்நாடெங்கணும் புகழொளி வீசி விளங்குதற்கு இவ்வாணிகத் தொழில் வாய்ப்பாயமைந்தது. அத்தொழிலில் ஓய்வுகிடைக்கும் பொழுதெல்லாம் முன்னையோரியற்றிய தமிழ்நூல்கள் பலவற்றையும் ஆராய்ந்து படித்து இன்புறுவாராயினர். அன்றியும், தம் வாணிகத் துறையில் பொன் வெள்ளி முதலிய உலோகங்களை உரைத்துப் பார்த்து மாற்று நிச்சயிப்பதுபோலத் தாம் ஆராயும் நூல்களையும் தம் மதிநுட்பத்தால் உரைத்துப் பார்த்து இஃது இத்தனை மாற்றுள்ளது. இஃது இத்தனைமாற்றுள்ளது என்று நிச்சயித்து வந்தனர். இங்ஙனம் மாற்றாராயுங்கால், தெய்வப் புலமைத் திருவள்ளுவனாரியற்றிய திருக்குறளும், கல்வியிற் பெரியராய கம்பரியற்றிய இராமாயணமுமே மாற்றுயர்ந்து விளங்கக் கண்டார். இவ்விருநூல்களிலுமுள்ள சீரிய கூரியதீஞ்சொற்களும் செவ்விய கருத்துக்களும் இவர் உள்ளத்தைக் கவர்ந்தன. ஆதலால், அந்நூல்கள் இரண்டையும் இடையறாது படித்து வந்தார். அப்பொழுது, திருக்குறளுக்குச் சிறப்புப்பாயிரமாக அமைந்த திருவள்ளுவமாலையில், பாரதம் பாடிய பெருந்தேவனார் இயற்றியதாகக் காணப்படும்

> " எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுறச்
> செப்பிய வள்ளுவர்தாஞ் செப்பவரும்—முப்பாற்குப்
> பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டைமறை
> நேர்வனமற் றில்லை நிகர் " என்னுஞ் செய்யுளில்

இராமகதையும் திருக்குறளுக்கு நிகராகக் கூறப்பட்டிருத்தலை யறிந்து சிந்தித்தார். திருக்குறள் ஒப்புயர்வற்ற நீதிநூல். இராமாயணமோ அந்நீதிகளை இடையிடையே யமைத்து ஒப்புயர்வற்ற தலைவன் தலைவியர்மேல் இயற்றப் பெற்றதோர் இதிகாசம். திருக்குறள் ஓர் இலக்கணம். இராமாயணம் அதற்கு இலக்கியம் எனத் தெளிந்தார். முன்பு நூல்களை யுரைத்து மாற்றுப் பார்த்ததில் இவ்விரு பெருநூல்களும் மாற்றுயர்ந்தனவாகத் தாம் மதிப்பிட்டதையும் நினைந்தார். பின்பு இவ்விரு நூல்களில் எதனையுலகிற்குப் பயன்படுத்தலாமென ஆராய்ந்தார். திருக்குறள் நீதிநூலாதலால் அது கற்றவர்க்கே யன்றி மற்றவர்க்கு இனிமைபயவாது. இராமாயணமோ நீதிசாரமாகவும் வரலாற்று நூலாகவும் அமைந்திருத்தலால் கல்லாரும் கற்றவருமாகிய எல்லாரையும் இன்புறுத்துவதாகுமென வுணர்ந்து, அந்நூலையே அழுத்தமாகப் பயின்றும், பலர்க்குக் கற்பித்தும், பொது மன்றங்கள் பலவற்றில் எல்லோருங் கேட்டு மகிழும்படி இன்னிசையோடு பிரசங்கித்தும் வந்தார்.

இவ்வாறு வாழ்க்கை நடத்தி வருங்கால், தம் வாணிக நிமித்தம் பொன் வெள்ளி முதலிய உலோகங்களைக் கொள்ள வேண்டி ஒருமுறை புதுவைக்குச் செல்லும்போது சீகாழியில் ஒரு மடத்தில் அன்றிரவு தங்கினர். அம்மடம் தருமபுர ஆதீனத்தைச் சார்ந்தது. கவிராயர் தருமபுரத்திற் கல்வி பயிலுங்கால் தம்முடன் பயின்றவரும் கார்காத்த வேளாள மரபினரும் ஆகிய சிதம்பரம்பிள்ளை யென்பவர், இல்லறம் மேற்கொண்டிருந்து பின்னர், பண்டாரச் சந்நிதிகளின் ஏவலால் துறவு பூண்டு கட்டளைத் தம்பிரானாக அம்மடத்திற்கு வந்திருந்தனர். சிதம்பரம் பிள்ளையும் கவிராயரும் ஒருவரையொருவர் கண்டு நெடுங்காலம் ஆயினமையால் எதிர்பாராமல் அன்று நேர்ந்த சந்திப்பு அவ்விருவர்க்கும் அளவிறந்த மகிழ்ச்சி விளைப்பதாயிற்று. அங்ஙனம் அளவளாவி இருக்குங்கால், தம்பிரான் தாம் இயற்றிய "கட்டளைமாலை" யென்னும் நூலைப் படித்துக் காட்டிக் கவிராயரிடமிருந்து அப்பொழுதே சிறப்புப்பாயிரம் பெற்றார். பின்னும், "சீகாழிப் பதிக்கு ஒரு பள்ளுப் பிரபந்தம் இயற்றத் தொடங்கி ஒரு பகுதியும் எழுதினேன். பல அலுவல்களால் அது முற்றுப்பெறவில்லை. தாங்கள் இங்கிருந்து அந்நூலை முடித்துக் கொடுத்துவிட்டே ஊர்க்குப் போகவேண்டும்." என்று தம்பிரான் வற்புறுத்தித் தாம் எழுதியிருந்த

ஒரு பகுதியையும் கவிராயரிடங் கொடுத்தார். இவரும் அதற்கு உடன்பட்டு அன்று இரவிலேயே அந்நாலை முடித்து அதிகாலையிலெழுந்து அம்மடத்திலுள்ள அடியார் ஒருவரை யழைத்து "முக்கியமானதொரு காரியத்தை முன்னிட்டுப் புதுவைக்குச் செல்கின்றேன். திரும்புங்கால் இங்குவந்து தங்குவேன். இச்செய்தியைத் தம்பிரானவர்களிடம் தெரிவித்து, இந்நூலையும் அவர்கள்பாற் சேர்ப்பிக்கவேண்டு" மெனக்கூறிப் புதுவைக்குப் போயினர். பொழுதுவிடிந்தபின், கவிராயர் முடித்துவைத்திருந்த பிரபந்தத்தைக் கண்டும் அவர் புதுவைக்குப் போயின செய்தியைக் கேட்டும் தம்பிரான் வியப்புற்று அவ்வரை யெப்பொழுதும் இவ்வூரிலேயே குடும்பத்துடன் இருக்கும்படி செய்யவேண்டுமென எண்ணி, அவருக்கென்று ஒரு வீடு சித்தம்செய்து, தக்க ஆட்கள் சிலரைத் தில்லையாடிக்கு அனுப்பிக் கவிராயர் அழைத்துவரும்படி சொல்லியதாகவே அவர் குடும்பத்தார்க்குச் சொல்லி அழைத்துவரும்படி செய்து அவ்வீட்டிற் குடியிருக்கச் செய்தார்.

புதுவைக்குச் சென்ற கவிராயர் சில நாட்கள் அங்கே தங்கியிருந்து, தம் காரியத்தை முடித்துக்கொண்டு முன்பு கூறியபடி சீகாழி மடத்திற்கு வந்தார். சிதம்பரத் தம்பிரான் அவர் தம்மிடஞ் சொல்லாமல் புதுவைக்குப் போனதுபற்றிச் சிறிது வருத்தங்காட்டி, அவரை யழைத்துக்கொண்டு உலாவி வருவார்போல அவர் குடும்பத்தார் இருக்கும் புதிய வீட்டிற்குச் சென்றார். தம்பிரானோடு கவிராயர் அவ்வீட்டிற்குள் வருவது அறிந்து அவர் மனைவியார் எதிர்கொண்டார். கவிராயர் கண்டு வியப்புற்றுத் தம்மனைவியின் வாய்மொழியால் தாம் புதுவைக்குச் சென்றபின் நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தையுந் தெரிந்தார். தாங்கள் குடும்பத்துடன் இவ்வூரிலே இருக்க வேண்டுமென்று தம்பிரான் வேண்டிக்கொண்டதனால் அது முதல் கவிராயர் அங்கே யிருந்தார். அதனால் அவர்க்குச் சீகாழி அருணாசலக் கவிராயர் எனப் பெயர் வழங்கலாயிற்று. கவிராயர் அங்கு வாழ்ந்து வருங்காலங்களில் தம்பிரான் விரும்பியபடி பாடிய தனிப்பாடல்கள் பல. அவையன்றி, அசோமுகி நாடகம், சீகாழித் தலபுராணம், சீகாழிக் கோவை, அநுமார் பிள்ளைத்தமிழ் முதலிய பல நூல்களும் இயற்றினர்.

இவ்வாறு வாழ்ந்துவரும் நாளில், சீகாழிக்கு அடுத்த சட்டநாதபுரம் என்னும் சிற்றூரில் வேங்கடராமையர்

கோதண்டராமையர் என்னும் அந்தணர் இருவர் இருந்தனர். சிறந்த இசைப்பயிற்சியுடைய அவ்விருவரும் கவிராயரிடம் வந்து சில சிறு தமிழ்ப் பிரபந்தங்களை முறையாகக் கற்றுப் பின்பு கம்பராமாயணம் பாடங் கேட்டுவந்தனர். அப்பொழுது அவ்விருவரும் ஆசிரியரை நோக்கி "ஐயா, தாங்கள் முன்பு இயற்றிய நூல்களால் தங்கள் புகழ் எங்கும் பரவவில்லை. இதிகாசம் இரண்டனுள் ஒன்றாகிய இவ்விராமாயணத்தை ஒரு பிரபந்தமாகச் செய்தால் உலகம் உங்களைக் கொண்டாடும்" என்றனர். தமக்கும் அத்தகைய எண்ணம் இருந்தமையால் அவர்கள் கூறியது உண்மையென்று உணர்ந்தார். ஆனால், இராம சரிதத்தைக் கம்பர் விருத்தப் பாக்களாற் பாடினர். பாலபாரதி யென்பவர் சந்தவிருத்தமாக இயற்றினர். மற்றும் பலர் பலவகைப் பாக்களாற் பாடியுள்ளார். இவற்றின் வேறாக எந்த முறையில் இயற்றுவதென்று ஆராய்ந்தார். இராம சரிதத்தை இதுவரை எவரும் இசைப்பாடல்களாக இயற்றாமையாலும், எளிய இனிய நடையிலமைந்த இசைப் பாடல்களே பெண்டிர் பேதையர் முதலிய பலரும் கேட்டு இன்புறுதற்கு ஏதுவாம் என்பதனாலும், இசையறிவு படைத்த தம் மாணவராகிய அந்தணர்களால் விரைவில் எங்கும் பாடிப் பரவும்படி செய்யலாமென்ற எண்ணத்தாலும் கீர்த்தனை வடிவில் அமைப்பது என்று முடிவு செய்து, பாலகாண்ட முதல் யுத்த காண்டத்தில் அங்கதன் தூதுவரை இடையிடையே கண்ணிகளும் விருத்தங்களும் கலந்துவரப் பாடித் தம் மாணவர் இருவர்க்கும் அவற்றைக் கற்பித்தார். அவர்களும் ஆர்வத்துடன் கற்றுக்கொண்டு சென்னை முதலிய இடங்களுக்குச் சென்று செல்வர்கள் முன்னிலையில் தம் இசை வளத்தால் அப்பாடல்களை இனிமையாகப் பாடிப் பரிசுகள் பல பெற்றுத் திரும்பினர். சிலகாலத்திற்குள் கவிராயர் பாடல்கள் தமிழ்நாடு முழுவதும் பரவின. அதனால் ஊக்கம் உண்டானமையாலும் தம் மாணவரின் தூண்டுதலாலும் யுத்தகாண்டத்தின் எஞ்சிய பகுதியையும் பாடி முடித்து அந்நூலுக்கு "இராம நாடகக் கீர்த்தனை" யெனப் பெயர் சூட்டினர். இந்நூல் எல்லோராலும் வரவேற்கப்பட்டமைக்குக் காரணம், எளிய இனிய தமிழ்ச் சொற்களாலும் வழக்குச் சொற்களாலும் இசை நாடகங்கட்கு ஏற்ற முறையில் எழுதப்பட்டிருந்ததும், கம்பராமாயணக் கருத்துக்களும் சொற்பொருள்களும்

எங்கும் மிளிரும்படி ஆக்கப்பெற்றிருத்தலுமேயாகும். இக் காரணங்களால் இந்நூல் யாவரும் போற்றத்தக்க முறையில் அமைந்தது.

இங்ஙனம் நூலை யெழுதி முடித்தபின், கம்பர் இராமாய ணத்தை அரங்கேற்றிய திருவரங்கத்திலேயே இந்நூலையும் அரங்கேற்றவேண்டுமென்றெண்ணி அங்கே சென்று, அரங்க நாதர் கோயில் அதிகாரிகளைக் கண்டு தம் எண்ணத்தை வெளி யிட்டார். அவ்வதிகாரிகள் கவிராயரை நோக்கி "முன்பு கம் பர் இராமாயணம் பாடியபோது பிராட்டியார் சந்நிதியில் பெருமாளை யெழுந்தருளப்பண்ணி ஸ்ரீமந் நாதமுனிகள் தலை மையிற் கூடிய பேரவையில் அவர் தம் நூலை யரங்கேற்றினர். அப்பொழுது பல அற்புதங்கள் நிகழ்ந்தன. அவர் இயற்றிய நூலையே நீர் நாடகமாகப் பாடியிருத்தலால் பெருமாள் உத் தரவு கொடுத்தால் அதனை யிங்கே அரங்கேற்றுதற்கு யாங் கள் உடன்படுவோம்" என்றனர். அதன்பின் கவிராயர் தனியே ஓரிடத்திலிருந்து அரங்கநாதரை நினைந்து "ஏன் பள்ளிகொண்டீரையா ஸ்ரீரங்கநாதரே, ஏன் பள்ளிகொண்டீ ரையா" என்று தொடங்கும் பாடலைப் பாடினர். இதனால் திருவுள்ளம் உவந்த பெருமாள், அன்று இரவில் கவிராயர் கனவில் ஒரு வைணவப் பெரியார் வடிவுடன் தோன்றி "கம்பர் இராமாயணத்தை யரங்கேற்ற வந்தபொழுது 'நம் சடகோ பனைப் பாடினையோ' என்று பெருமாள் கேட்டார். கம்பர் சடகோபர்மேல் அந்தாதி யொன்று பாடினர். அதன் பின்னர் நூலரங்கேறியது. அவ்வாறே நீரும் உம்முடைய நாடகத்தில் நம்பெருமாளுடைய பரிசனங்களைப் பாடினால் உமது நூலும் அரங்கேறும்" என்று கூறி, இவ்வாறே கோயிலதிகாரிகள் கனவிலுந் தோன்றி "கவிராயரால் நம்பரிசனங்களைப் பாடு வித்துக்கொண்டு அவர் நூலைக் கேளுங்கள்" என்று கட்டளை யிட்டு மறைந்தருளினர். பொழுது புலர்ந்தபின் கவிராயரும் கோயிற் பணியாளரும் தம்முட் கலந்து தாம் கண்ட கனவுகள் ஒன்றுக்கொன்று பொருத்தமுற்றிருத்தலை அறிந்து இது பெரு மாளின் திருவுளப் பாங்காகும் என்று கூறினர். பின்பு கவிரா யர் தம் நாடகத்தில் தோடயம்பாடி அதில் அனந்த கருட விசு வச்சேனர், பஞ்சாயுதங்கள், ஆழ்வார்கள், ஆசாரியர்கள் ஆகிய அனைவரையும் அமைத்தார். அப்பால், கம்பராமாயணம் அரங்கேற்றிய மண்டபத்திலே பங்குனி அத்தநாளில் திரு

வரங்கத் திருமுற்றத்து அடியார் முன்னிலையில் கவிராயர் நூலும் அரங்கேறியது. கோயிலதிகாரிகள் அவர்க்குப் பல வகையான பரிசுகளும் மரியாதைகளும் வழங்கினர்.

அதன்பின், அந்நாளில் தஞ்சையை ஆண்டுவந்த துளசி மகாராசர் அவைக்களத்தில் தம் நூலை அரங்கேற்ற எண்ணி அங்கே சென்றார். அப்போது சென்னை நவாப்பின் படைகளால் தஞ்சைக் கோட்டை முற்றப்பட்டிருந்தது. அதனால் அரசரைக் காண இயலவில்லை. புதுவை நகரில் பெருஞ் செல்வரும் செல்வாக்கு உடையவருமாயிருந்த ஆனந்தரங்கப் பிள்ளை யென்பவரிடம் தம் நூலைப் பாடிக் காட்டச் சென்றார். இவர் தஞ்சைத் துளசி மகாராசருக்குச் சிறந்த நண்பராதலால் அவர் கேட்பதற்கு முன் தாம் கேட்பது முறையன்று என்று கூறிக் கவிராயருக்குத் தக்க மரியாதைகள் செய்து, சென்னையிலுள்ள தம் நண்பராகிய மணலி முத்துக்கிருஷ்ண முதலியாருக்குத் திருமுகங் கொடுத்து அவரிடம் அனுப்பினார். கவிராயர் சென்னைக்குச் சென்று மணலி முத்துக்கிருஷ்ண முதலியாருக்கு ஆனந்தரங்கப்பிள்ளை யளித்த திருமுகத்தையும் பின்வரும் சீட்டுக் கவியையும் அனுப்பினார்.

### சீட்டுக்கவி

"சித்திதரு கிறவல்லி பத்திதரு கிறவல்லி தேவர்கள் வணங்கும்வல்லி
தில்லைநா யகவல்லி சிவகாம வல்லியிரு திருவிழிக் கருணையாலே
சத்தியவர் சகனென்று பூமண்ட லாதிபர்கள் தாமெங்க ளுந்துதிக்கும்
சகலபா ஷாநிபுண மணலிமுத் துக்கிருஷ்ண சதுரநீ வாழிகண்டாய்
நத்துமலர் குவளைநான் மதியம்நீ செஞ்சாலி நான்கருவி மழைமேகநீ
நளினநான் பரிதிநீ பிள்ளைநான் அன்னைநீ நான்கவிஞன் வழுதிநீகாண்
சுத்தமுள ராமா யணந்தனைக் கொண்டுனது சுமுகமது பெறவருகிறேன்
சொற்பொருள் அறிந்தளவு சொல்லுவேன் கேட்கவே துணையாக
வேணுநீயே"

இவ்விரண்டையுங் கண்டு மகிழ்ந்த முதலியார், கவிராயரை அழைத்துத் தக்கவாறு உபசரித்து, கல்வியாளரும் செல்வர்களும் நிறைந்த பெரிய சபை கூட்டி இராமநாடக முழுதும் விரிவாகப் பிரசங்கம் செய்து முடித்தற்கு வேண்டும் வசதிகளைச் செய்துதவினார். பல நாட்களாக ஆண் பெண் ஆகிய இருபாலரும் வந்திருந்து ஆர்வத்துடன் கேட்டு மகிழ்ந்தனர். இரா

மர் பட்டாபிஷேக நாளன்று முதலியார், கவிராயருக்கு வரிசைகள் பல வழங்கினர். அவற்றைக் கவிராயர் பாடிய செய்யுளால் அறியலாம்.

"கனந்தந்தான் கனகாபி ஷேகந் தந்தான்
களங்கமில்லாக் கருப்பொருளை யழைத்துத் தந்தான்
மனந்தந்தான் முடிசூட்டு மாலை தந்தான்
வாணிசிங்கா தனத்திருத்தி வரிசை தந்தான்
இனந்தந்தான் இராமகதை யெவர்க்குந் தந்தான்
எனைராமா யணக்கவிஞன் எனப்பேர் தந்தான்
அனந்தந்தான் மணவிமுத்துக் கிருஷ்ண பூமான்
அகந்தந்தான் இருமையிலுஞ் சுகந்தந் தானே"

இவ்வாறு மணவிமுத்துக்கிருஷ்ண முதலியாரால் பல பரிசுகள் பெற்ற கவிராயர், லிங்கப்ப செட்டியார் குமாரராகிய தேப்பெருமாள் செட்டியார்க்கு அடியிற் குறிக்கப்பெற்ற சீட்டுக்கவியை யெழுதி யனுப்பினார்.

### சீட்டுக்கவி

கணிகொண்ட பஞ்சலட் சணமும்ரா மாயணக்
கடலையும் உணர்ந்த புலவன்
கவிராசர் புகழ்கின்ற காழி யருணாசலக்
கவிராயன் எழுதும் ஓலை
மணிகொண்ட மார்பிலிங் கப்பமகி பாலன்
மகிழ்ந்த சுதன் வணிகாதிபன்
வருஞ்சீர் படைத்ததேப் பெருமாள் மகீபனிதை
மனமுவந் தினிது காண்க.
அணிகொண்ட தியாகேசர் வண்ணமுறை செய்ததும்
அதற்குவெகு மதிசெய்ததும்
அதுநமக் குபகார மானதும் இப்புவியில்
அறியாத பேரு முளரோ
பணிகொண்ட ராமகீர்த் தனையுமப் படியே
பரிந்துநீ கேட்க வேண்டும்
பாரிலொ ராயிரம் பிறைகண்டு நீபொருள்
படைத்து வாழ்ந் திடுகமாதோ."

இப்பாடலைப் பார்த்துச் செட்டியார் தக்க வரிசைகள் வழங்கினார்.

முன்பு தஞ்சைக் கோட்டையை முற்றியிருந்த மதார் மல்க் நவாப்பும் துளசிமகாராசரும் தம்முள் ஒற்றுமையாகி உடன்பாடு செய்துகொண்டமையால் கவிராயர், துளசிமகா ராசரையும், புதுவை ஆனந்தரங்கப் பிள்ளையையும், உடையார் பாளையத்து மன்னராகிய உவரங்கப்ப உடையாரையும், வேறு சில குறுநில மன்னர்களையுங் கண்டு, தனித்தனியே அவர்கள் முன்னிலையில் தமது நூலைப் பிரசங்கித்துக் காட்டிச் சிறந்த வரிசைகள் பெற்றார்.

இங்ஙனம் இவர் ஈட்டிய பொருளைக்கொண்டு சீகாழியி லிருந்து தம் குடும்ப வாழ்க்கையை நடத்திவந்தார். கவிராயர் தலையில் தாழ்வடம் மேனியில் திருநீற்றுப்பூச்சு முதலிய சிவ சின்னங்களைப்பூண்டு தூய வெள்ளாடை யுடுத்துச் சைவ தவக் கோலத்துடன் விளங்கினார். இவர் தமது திருமணத்துக்குப் பின் தில்லையாடியில் பன்னிரண்டு ஆண்டும் பின்னர்ச் சீகாழி யில் இருபத்தைந்து ஆண்டும் வாழ்ந்தனர். தம் அறுபதாம் ஆண்டில் இராம நாடகத்தைப் பாடி முடித்தனர். இவர்க்கு மூன்று புதல்வர்கள் இருந்தார்கள். அவருள் மூத்தவர் அம் பலவாணக் கவிராயர். இவருடைய புதல்வராகிய சுப்பராயக் கவிராயர் என்பவர் இவ்விராம நாடகக் கீர்த்தனைகளைப் பாடிப் பொருள் கூறுதலில் மிக வல்லுநராயிருந்தார். இங்ஙனம் தமிழ்நாடு முழுதும் தம்புகழ் பரப்பிச் சீரும் சிறப்பும் பெற்று வாழ்ந்த நம் கவிராயர் தமது அறுபத்தேழாம் ஆண்டில் (விகாரி—ஆனி) இறைவன் திருவடி நிழல் எய்தினார். இவர் பிறந்து இன்றைக்கு 233 ஆண்டுகளும், இராமநாடகம் பாடி அரங்கேற்றி 173 ஆண்டுகளும், இறைவன் திருவடி நீழலெய்தி 166 ஆண்டுகளும் ஆயின. இக் கவிராயருடைய புகழும் அப்புகழ்க்குக் காரணமாகிய இராம நாடகமும் எல்லாம் வல்ல இறைவன் திருவருளால் என்றும் நின்று நிலவுக.

அண்ணாமலை நகர்,<br>16—5—1945.

# குறியீடுகளின் விளக்கம்

| | |
|---|---|
| ஆ | ஆரோகணம். |
| அ | அவரோகணம். |
| ப | பல்லவி. |
| அ. ப | அனுபல்லவி. |
| ச | சரணம் |
| * | இது பாட்டின் சாகித்தியத் துவக்கத்தைக் குறிக்கும். |
| , | இது ஒரு அட்சரகால நிறுத்தத்தைக் குறிக்கும். |
| ; | இது இரண்டு அட்சரகால நிறுத்தத்தைக் குறிக்கும். |
| \| | இது ஒரு தாளவட்டத்தின் பகுதியைக் குறிக்கும். |
| ‖ | இது ஒரு தாளவட்டத்தின் முடிவைக் குறிக்கும். |
| - | இது சுரங்களுக்கு இடையே இடப்பட்டிருந்தால் அந்தந்த இராகத்திற்குத் தக்கபடி பதங்களை (சுர அடுக்குகளை)ப் பிரித்துப் பாடுவதைக் குறிக்கும். |
| . | இது சுரங்களுக்கு மேலிருந்தால் தாரஸ்தாயியையும், சுரங்களுக்குக் கீழிருந்தால் மந்தரஸ்தாயியையும், சாகித்தியத்தைத் தொடர்ந்துவந்தால் அகார, இகார, உகாரங்களையும் குறிக்கும். |
| = | இது சுரங்களின் இடையே இடப்பட்டிருந்தால் ரூபகம், சாய்ப்பு, சம்பை இம்மூன்று தாளங்களில் வரும் இரண்டாவது தட்டைக் குறிக்கும். |
| —— | இது சுரங்களுக்குக் கீழிருந்தால் மத்திமகாலம் என்பதைக் குறிக்கும். (அதாவது இரண்டாங்காலம்). |
| ═══ | இது சுரங்களுக்குக் கீழிருந்தால் துரிதகாலம் என்பதைக் குறிக்கும். (அதாவது மூன்றாங்காலம்). |

| | |
|---|---|
| ~~~~~ | இது சுரங்களின்மேல் இடப்பட்டிருந்தால், அந்தந்த இராகத்திற்குத் தக்கவாறு சுரங்களை அசைத்துக் கம்பிதமாகப் பிடிக்கவேண்டும் என்பதைக் குறிக்கும். |
| + | இது சுரங்களுக்கு மேலிட்டிருந்தால் வேறு சுர ஸ்தானம் என்பதைக் குறிக்கும். (உதாரணம்) காம்போதிக்கு வரும் காகலி நிஷாதம், பைரவிக்கு வரும் சதுச்ருதிதைவதம் இன்னும் இவ்வாறு வரும் சுரங்களையுங் குறிக்கும். |
| { } | இது பல்லவியின் முடிவையும், அனுபல்லவியின் முடிவையும் குறிக்கும். |
| | இப்புத்தகத்தில் காணப்படும் "சாய்ப்பு" என்பதை "மிசிர சாய்ப்பு எனக் கொள்க. ஷை தாளங்களில் எழுதிய கீர்த்தனங்கள் (3—4) ஆக 7 அட்சரங்களாகவும் (6—8) ஆக 14 அட்சரங்களாகவும் சுரப்படுத்தி எழுதப்பட்டிருக்கின்றன. |

# பாடல் முதற்குறிப்பட்டவணை



† இக்குறியுள்ள கீர்த்தனைகளுக்கு "சங்கீத ரத்னாகரம்" அரியக்குடி இராமானுஜ ஐயங்கார் அவர்கள் வர்ணமெட்டமைத்து உதவினார்கள்.

இந்நூலில் அடங்கியுள்ள இராகங்களின்

# பெயரட்டவணை

| எண் | இராகம் | பாட்டு எண் |
|---|---|---|
| 1 | அசாவேரி | 43–50 |
| 2 | அடாணா | 20 |
| 3 | ஆரபி | 38 |
| 4 | ஆனந்த பைரவி | 18–23–31 |
| 5 | உசேனி | 16–22 |
| 6 | கமாசு | 33 |
| 7 | கல்யாணி | 17–29–40 |
| 8 | காம்போதி | 42 |
| 9 | கேதாரகௌளை | 49 |
| 10 | கேதாரம் | 25 |
| 11 | கௌளிபந்து | 5 |
| 12 | சகானா | 24 |
| 13 | சங்கராபரணம் | 30–41 |
| 14 | சாவேரி | 26–45–48 |
| 15 | சுருட்டி | 13–21 |
| 16 | சௌராட்டிரம் | 28–34 |
| 17 | தன்யாசி | 32 |
| 18 | துவசாவந்தி | 4 |
| 19 | தோடி | 12–39 |
| 20 | நாட்டை | 1 |
| 21 | பந்துவர்ாளி | 44 |
| 22 | பரசு | 36 |
| 23 | பிலகரி | 46 |
| 24 | புன்னாகவராளி | 35 |
| 25 | பூபாளம் | 10 |
| 26 | பைரவி | 3–9 |
| 27 | மத்தியமாவதி | 11–27–47 |
| 28 | முகாரி | 8–19 |
| 29 | மோகனம் | 2–6 |
| 30 | யதுகுல காம்போதி | 15 |
| 31 | வேகடை | 14–37 |
| 32 | ஸ்ரீராகம் | 7 |

அருணாசலக்கவி அவர்கள்

இயற்றிய

# இராம நாடகப் பாடல்கள்

---

இப்பாடல்களின் இசையமைப்புக்கள் கோல்லங்கோட்டுக்குச் சமீபமுள்ள பனங்காட்டூர் **திரு. சிவராம பாகவதர்** அவர்களால் உதவப்பெற்றன.

***இவற்றிற்கு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்து இசைக்கல்லூரி வீணையாசிரியர்களா திரு. V. S. கோமதிசங்கர ஐயர் அவர்களாலும், திரு. K. S. நாராயணசாமி ஐயர் அவர்களாலும் இசை அமைப்புக்கள் திருத்தி அமைக்கப்பெற்றன.***

---

# 1

ஆசிரியர், தாம் பாடத்தொடங்கிய இராம நாடகம் என்னும் இந்நூல் இடையூறின்றி இனிது நிறைவேறுதற் பொருட்டுத் தம்வழிபடு கடவுளாகிய விநாயகப் பெருமானை வணக்கஞ் செய்கின்றார்.

---

| | | |
|---|---|---|
| **இராகம் :** நாட்டை | ஆ.: ச கா ம ப நீ ச் | { **36-வது மேளத்திற்** |
| **தாளம் :** ஆதி | அ.: ச் நீ ப ம ரீ ச | **பிறந்தது.** |

பல்லவி

**வி**நாயகா சரணம் சயசய—விநாயகா சரணம் — **விநாய.**

அனுபல்லவி

அநாத ரட்சகனே கசமுகனே—ஐங்கரனே சிவசங்கரன் மகனே — **விநாய.**

சரணம்

1. அன்பிலாத பேயன் என்னுடைய—அறிவுவிளங்கவே துணைவருவாயே
என்குல தெய்வம் நீயே இந்த—இராம நாடகத்துக் கனுக்கிரகிப்பாயே — **விநாய.**

௨. வானவர் பணிவோனே நல்ல—வாக்குத் தந்து காத்தருள் சீமானே
நான்உன தடியேனே ராம—நாடகத்துக் கருள்புரி நீதானே — விநாய.

௩. உண்மை ஞானந் தோணும் உன்றன்—உதவியாலே நல்ல புத்திகள் பூணும்
நன்மை யெய்திடுங் காணும் ராம—நாடகத்தைச் சொலநீ முன்னிற்க வேணும் — விநாய.

---

| | | | | |
|---|---|---|---|---|
| ப. | நி ச்நி பா , மா - ம க ப ம ரி ச - ம க | மா பா ; ; - | நி நி ப ம க ம ப நி | ‖ |
| | வி . . நா . ய - கா . . . . . . - ச ர | ணம் . . . - | . . . . ச ய ச ய | |
| ௨. | ச் ரி ச் நி ச்நி - ப நி ப ப ம ம ரி ச - ம க | மா பா ; ; - | ச் நி ப ம க ம ப நி | ‖ |
| | வி . . நா . . - ய . . கா . . . . . - ச ர | ணம் . . . - | . . . . ச ய ச ய | |
| ௩. | ச் நி ச் ரி , ச்ா , ச் நி - ப ப ம மரிச - ம ம | ரீ ; ; ; - | சா ; ; ; | ‖ |
| | வி . . . . நா . ய . - கா . . . . . - ச ர | ணம் . . . - | . . . . . | |
| அ. ப. | நி பா ம க ச க ம பா - நி ப ச் நி ச்ா - | ரி ச் நி ச்ா - ச் நி | பா ப ம - க ம ப நி | ‖ |
| | அநா த ர ட் ச க னே - க ச மு க னே - | ஐங்க ர னே - சிவ | சங்க ரன் - ம க னே | |

2\. ச் ரி ச் நி ப ம க ச க ம பா - நி ப ச் ச் ரி - | ச் ம்ரா க் ச் நி சா - ச் நி | ச் ரி ச் நி ப ம - க ம ப நி ||
அ நா . . த ரட் ச க னே - க ச மு க னே - ஐ ங் . க ர னே - சிவ சங் . . கரன் - ம கனே .

{ ச் நி ச் ரி , ச்ா ; ச் நி - ப ப ம ம ரி ச - ம ம | ரி ; ; ; - | சா ; ; ; } ||
{ வி . . . . நா . ய . - கா . . . . . . - ச ர ணம் . . . . - . . . . . }

ச. பா ம ரி ச - ம க ம பா - பா ப ப ப - | ம க ம ப - ப நி ம ப - | ம ப ச் நி ச்ா ச்ா ||
அன் பிலாத - பே . ய ன் - என் னுடைய - அ றி வு வி - ளங் க வே - து ணை வ ரு வா யே

2\. பாம ம ப ம க சா - நி ச ப ம ப - ம க ம ப ப - | ச் நி ப ம க ம ப நி | ம ப ச் நி ரி ச்ா ||
அன்பி லா . . . த - பே . யன் . - என்னுடைய - அ றி வு வி ள ங் க வே து ணை வ ரு வா யே

3\. ச் ரி ச் நி பா ம ப ம க சா - நி ச க ம ப நி ச் ரி - ச்ா நி ம ப | ம க ம ப நி ப ச்ா | ச் நி ம ப ச்ா ச்ா ||
அன் . . பிலா . . . த - பே . யன் . . . , - என்னுடைய அ றி வு வி ளங் க வே து ணை வ ரு வா யே .

ச் நி ச் ச் க்ா க் க் - ம் ப் ம் ரி ச்ா ச் ச் - | ச் ரி ச் நி ச் நி ப நி - | ச் நி ப ம க ம ப நி ||
எ ன் கு ல தெய் வ மும் - நீ . . . யே இந் த - ரா . ம நா . ட கத் துக் - க னுக் ர கிப் பா . யே .

ச்ஙிச்ரீ , ச்ா , ச்ஙி - ப பமமரிச ; மம | ரீ ; ; ; | சா ; ; ; ||
வி . . . . நா . ய . - கா . . . . . . - ச ர ணம் . . . . . . . . .

# 2

கம்பர் இராமாயணம் பாடி அரங்கேற்றம் செய்த திருவரங்கத்துப் பெருமாள் திரு
முன்பே தாமும் இந்நூலை அரங்கேற்ற வேண்டுமெனக் கருதி ஆசிரியர் அங்கே
சென்றபோது, அக்கோயில் அதிகாரிகள் இந்நூலாசிரியரை நோக்கி,
எங்கள் பெருமாள் நீர்இயற்றிய நூலைக் கேட்க உடன்பாடு
காட்டுவாராயின் யாம் கேட்போம் என்றபோது
இவர் பெருமாளைக் குறித்துப் பாடியது.

இராகம் : மோகனம் — ஆ. : ச ரீ க ப தா ச் — 28-வது மேளத்திற்
தாளம் : ஆதி — அ. : ச் தா ப கா ரி சா — பிறந்தது.

பல்லவி

ஏன் பள்ளி கொண்டீர் ஐயா—ஸ்ரீரங்கநாதா
ஏன் பள்ளி கொண்டீர் ஐயா — ஏன்.

அனுபல்லவி

ஆம்பல் பூத்தசைய பருவத மடுவிலே
அவதரித்தஇரண் டாற்று நடுவிலே — ஏன்.

சரணம்

1. கோசிகன் சொல்குறித் ததற்கோ—அரக்கி—குலையில் அம்புதெறித் ததற்கோ
ஈசன் வில்லைமுறித் ததற்கோ—பரசு—ராமன் உரம்பறித் ததற்கோ
மாசிலாதமிதிலேசன் பெண்ணுடன் வழிநடந்த இளைப்போ
தூசிலாதகுகன் ஓடத்திலேகங்கைத் துறைகடந்த இளைப்போ
மீசுரம் ஆம்சித்ர கூடச் சிகரக்கல் மிசைநடந்த இளைப்போ
காசினி மேல்மாரீசன் ஓடிய கதிதொடர்ந்த இளைப்போ—ஓடிக்
களைத்தோ தேவியைத்தேடி இளைத்தோ மரங்கள்ஏழும்
தொளைத்தோ கடலைக்கட்டி வளைத்தோ இலங்கையென்னும்
காவல் மாநகரை இடித்த வருத்தமோ
ராவணாதிகளை அடித்த வருத்தமோ. — ஏன்.

2. மதுரையி லேவரும் களையோ—முதலை—வாய்மக னைத்தருங் களையோ
எதிர்எரு தைப்பொருங் களையோ—கன்றை—எடுத்தெ றிந்தபெருங் களையோ
புதுமை ஆனமுலை உண்டு பேயின்உயிர் போக்கி அலுத்தீரோ
அதிர ஓடிவரும் குதிரை வாயையிரண் டாக்கி அலுத்தீரோ
துதிசெய் கோவியர் ஆடைகள் பலவுந் தூக்கி அலுத்தீரோ
சதிசெய் காலினால் காளிங்கன் மணிமுடி தாக்கி அலுத்தீரோ—மருதம்
சாய்த்தோ ஆடுமாடுகள் மேய்த்தோ சகடுருளை
தேய்த்தோ கஞ்சன்உயிரை மாய்த்தோ அர்ச்சுனனுக்காச்
சாரதி யாய்த்தேர் விடுத்த வருத்தமோ
போரிலே சக்கரம் எடுத்த வருத்தமோ ஏன்,

3. படிதனில் மெத்தவும் நானே—உம்மைப்—பரம்என வேஅடுத் தேனே
அடிமைகொள் வீர்என்னைத் தானே—செம்பொன்—அணிஅரங் கப்பெரு மானே
தடம் உறைந்தகரும் பாறை சாபமது தடுத்துரட் சித்தீரே
விடஒண் ணுதகா காசுர னுக்கொருகண் விடுத்துரட் சித்தீரே
கொடுமை கொண்டமுத துரோபதைக் குத்துகில் கொடுத்துரட் சித்தீரே
மடுவில் ஆனைமுன் ஓடி முதலையை மடித்துரட் சித்தீரே—அதுபோலே
வாரும் கிருபைக் கண்ணாலே பாரும் மனக்கவலை
தீரும் நினைத்தவரந் தாருந்தாரும் என்சாமி

வட்ச மேவுமக லட்சுமி யுடன்பெரும்
பட்சம் ஆகஎன்னை ரட்சிக்க எழுந்திரும் ஏன்.

ப. ; -* கபா ரீ ச - சா தா - சா ரீ | கா ; ; - க க | ரி - கா ப - தா ச்ா ||
. - ஏ ன் பள் ளி - கொண் . - ட ரை யா . . - ஸ்ரீ . | . - ரங் க - நா தா

; -* த ரிச் தா ப - கா த ப க ரி - க ப | த ச் ; , - ச் த ப | க ரி - த ப ரீ சா ||
. - ஏ . ன் பள் ளி - கொண் . . ட . -ரை . யா . . . . . . . . . . . . .

2. ; -* க தபதா ப ரீ ச - சா ரிசசத-சா ரீ | கா ; ; - க க | ரி - கா ப - த ச்ரீ க்ரி ||
. - ஏ . . . ன் பள்ளி-கொண் . . . . - ட ரை யா . . - ஸ்ரீ . | . - ரங் க - நா . தா . .

ச்ா -* ச்தாரிச்த த ப ப - கா தபபக-கரிரிச | ச ரிகபதச் ; ; ; தச்தப | ரீ ; சா ; ||
. - ஏ . . . ன் பள்ளி-கொண் . . . . -ட . ரை . யா . . . . . . . . . . . . . .

அ.ப. ; -* கா கா பா ; பா - தா தா | ; - ப தா ச் தா - | ச்ா ச்ா த ப தா ||
- ஆம் பல் பூ த் த - சை ய் | . - ப ரு வ த - | ம டு வி . லே

ரீ - * க்ரிச்ச்தப-கககதபகரிசரி- | கா தப கா , ரி | சரிகபரீசா ; ||
. . - ரா . . மன் . - உ . ரம்ப . றித்- தத ற்கோ . . . . . . . . . .

காகபாப-கபதக்ச்-ச் தப கா- | பதச்தபக-பத | ச் தச்ரி ; ; ||
மா சிலாத் - மி திலே . சன்- பெண்ணுடன்- வழி நடந்த-இளைப் போ . . . .

தாதக்ரிச்த ச்-ரிச்ச் ச்தாத ப- | பதச்தபக-தப | தா ; தச்தப ||
தூ சிலா . தகு கன்-ஓ . டத்திலே கங்கைத்- துறைகடந்த-இளைப் போ . . . . .

காகக பா-கபதச்ச்-தச்தபக- | பதச்தபக-தப | தா தபகபகரி ||
மீ சுரமாம்-சித்ரகூ . டச்-சிகரக்கல்- மிசைநடந்த-இளைப் போ . . . . . .

சரிகப கரி-சரிகப் ப-தா பகா- | பதச்தபக-தப | தா தபகபகரி ||
கா . சினிமேல்-மா . ரீ . சன்-ஓடிய- கதிதொடர்ந்த-இளைப் போ . . ஓ . டிக்

சரீ கா , -ரிகதபபக-கபகரி- | சரீ கா , -கப | தச்தப-கபகரி ||
களைத்தோ . -தே . வி . யைத்-தே . . டி- இளைத்தோ . - ம . ரங்கள்-ஏ . மூந்

| ச ரீ கா ,-கபதச்தப-கபகரி- | ச ரீ கா ,-பரி | கா பா பா பா ||
|---|---|---|
| தொளைத்தோ .-க . ட . லைக்-கட்டி .- | வளைத்தோ .-இ . | லங்கை யென்னும் |
| கா க பா ப ப ப - ப த ச் ச் த் ப தா | தரிச்தச்தபக | பத்ச-ச் தபகரி || |
| காவல் மா ந க ரை- இடித்த வ்ருத் த மோ | ரா . வணு . திகளை | அடித்த- வருத்தமோ . |

{ச ரி -* . . - "ஏன் பள்ளிகொண்டீரையா" பல்லவியின் 2-வது சங்கதியைப் பாடி நிறுத்தவும். } ||

# 3

## பாலகாண்டம்

இந்நூலின் பெரும்பிரிவுகள் ஆறனுள் முதலாவதாகிய பாலகாண்டத்தின் தொடக்கத்தில்;
இப்பாடலின்கண் திங்கள் தோறும் மூன்று மழை பொழிய, ஆண்டொன்றுக்கு
முப்போகம் விளைய, புலியும் பசுவும் ஒருதுறையில் நீருண்ண, ஏனைய விலங்கு.

களும் பறவைகளும் வேற்றுமையின்றி ஒருவழிச் செல்ல, மக்களெல்
லோரும் நீண்ட வாழ்நாளும் நிறைந்த செல்வமும் பெற்று இனிதே
யிருப்ப, மற்றும் பலவகை நலங்களும் நிறைய ஆறிலொரு
கடமை கொண்டு, பகைவென்று, அறுபதினாயிரம் ஆண்
டுகள் அறச்செங்கோல் செலுத்திய அரசர்க்கரச
னாகிய தசரதமன்னன் ஆட்சிமுறை விரித்துக்
கூறப்படுகின்றது.

---

இராகம் : பைரவி — ஆ. : சரிகமபத்நிச் — { 20-வது மேளத்திற் பிறந்தது.

தாளம் : சாய்ப்பு — அ. : ச்நிதபமகரிச

பல்லவி

ராச ராசர்க்கும் ராசன் தசரத ராசனிருந்தானே — ராச.

அனுபல்லவி

தேசத் திலகன் அயோத்தி நகர்க்கொரு
திலகன் ரவிகுல திலகன் ஆகவே — ராச.

சரணம்

1. மந்திர தந்திரமும் நித்திய நைமித்தமும்—மகங்களும் தினம் செழிக்கவே
வன்புலி யொடுபசு வும்ஓர் துறைநீர்—உண்டுகொண்டு பயம் ஒழிக்கவே
இந்திர பதமும் குபேர தனங்களும்—எவருஞ் சிறிதென்று பழிக்கவே
எங்கெங்கும் முப்போகம் விளையவே—திங்கள்தோறும் மும்மாரி கொழிக்கவே ராச.

2. நாலு வர்ணாச் சிரமங் களுஞ்சொன்ன—நடைபுரண்டு பாயாமலே
நரர்க்கும் வேறுள்ள உயிர்க்கும் வயதுகள்—நடுவிலே தேயாமலே
கோல மாகிய மிருகமும் பறவையும்—குறிகடந்து மேயாமலே
குடியில் ஆறில்ஒரு கடமை கொண்டுசெங்—கோலின் முகம் சாயாமலே ராச.

3. மறுமங் கையருக்கும் மறுமன் னவருக்கும்—மார்பும் முதுகுங் கொடாமலே
வளரும் அட்டலட் சுமியுந் தன்அரண்—மனைவிட் டடியை எடாமலே
அறுப தாயிரம் வருட மும் ஏ—காதி பத்தியம் விடாமலே
ஆரும் மனதில்வி சாரத் தால் ஆ—ராய்ச்சி மணியைத் தொடாமலே ராச.

---

ப. ; , க் ரீ . . = ச்ா ச் ரி நி த த ப | ப ம நி நி த ப = , ம பா , ப ம க ||
. . ரா ச ரா . . சர்க் கும் ரா . ச ன் . . . த ச . ர த .

ரிசா கரிநி = சா, கரிகமப | மகரிசரிக = ரீ ; சா ; ||
. . ராசன் . . இருந் . . தா . . . . . . னே . . .

2\. ; , க்ரி = ச்ா ச்ரிக்ரி ச் நி தப | மபத்நி ச் ரிக்ரி = ச் ச்ரிச்நி தபூபமக ||
. . ராச ரா . . . . சர்க்கும் ரா . . . சன் . . . த . ச . . . ரத .

{ரிசா கரிநி = சா, கரிகமப | த்நிச்ரிக்ரிச்நிதபமக = ரீ ; சா ; } ||
{. . ராசன் . . இருந் . . தா . . . . . . . . . . . னே . . . }

அ. ப. ; , மபா = த்ா நீ ச்ா , ரி | ச் ரிக் ரி ச்ா = ச்ா நி ரி ச் நி தப ||
. . தேசத் தி லகன் . அ யோ . . த் தி ந கர்க் கொ . . ரு .

மபத்நி ச்ா = ச்ா ச்நி தா பா | பமநீ தப = பமபத்நீ ச்ா ||
தி . ல . கன் ர வி . கு ல தி . லகன் ஆ . . . கவே

{நி ச் ரி
{. . . " ராசராசர்க்கும் " பல்லவியின் 2-வது சங்கதியைப்பாடி நிறுத்தவும். } ||

ச. ;, , ப தா = பா ; ப, நி த ப | ம ப த்ந் நி ச்ா = , ரி ச் நி தா பா ||
. . மந் த்ர தந் . த்ர . மு ம் . . . நி த்ய . நை மி த் த மும்

ப ம நி நி த ப = ம க ரி க ம ப கா | ரி ச நி ச ரி க = மா ப த ப த பா ; ||
ம . க ங் க . ளு ந் . . . தி னம் . . செ ழிக் க . வே . . . . . . .

; , ம பா = த்ா நீ ச்ா ச்ா | ச் ரி க் ரி ச்ா = ச்ா நி ரி ச் நி த ப ||
. . வ ன் பு லி யொ டு ப . சு . வும் ஒ . ர் து . றை .

நி த ம க்ா ரி = ச்ா ச் நி தா பா | ப ம நீ த ப = ப ம ப த் நீ ச்ா ||
நீ . ர் உண் டு கொண் . . டு ப ய ம் . . . ஒ . ழி க் க வே

நீ த் நி ச் ரி = க் ம் க் ரி ச் நி ச் ரி | க் ரி ச்ா ரி ச் = நீ . த் நி ச்ா ரி ச் ||
இந் த்ர ப த முங் கு பே . ர த னங் க ளும் எ வ ருஞ் . சி றி தென் று ப ழிக் க வே

த் க் ரி க் ச் ரி = . நீ க் ரி ச் நி த ப | த் நி ச் ச் நி த ப = ம் ம நி நி த ப ம ப ||
எங்கெங் குமுப் போ . கம் வி ளை ய வே திங்கள் தோ . . றும் மும்மா . . ரி கொ ழிக்

தநி ச் / க . வே — "ராசராசர்க்கும்" பல்லவியின் 2-வது சங்கதியைப் பாடி நிறுத்தவும்.

+ இக்குறி சதுசுருதி தைவதத்தைக் குறிக்கும்.

---

# 4

*தசரத மன்னன் தனக்குப் புத்திரப்பேறு இல்லாத குறையைத் தன் குருவாகிய வசிட்டமுனிவரிடங் கூறி வருந்துதல்.*

---

**இராகம் :** துவசாவந்தி    **ஆ. :** சரிமகமபதநிச்    { 28-வது மேளத்திற் பிறந்தது.

**தாளம் :** ஆதி    **அ. :** ச்நிதபமகரி+சரி+மகா்ரிச

பல்லவி

**பிள்ளை யில்லாத பாக்கியம் நான்—பெற்றிருந்தென்ன சிலாக்கியம்**    பிள்ளை

அனுபல்லவி

வள்ளலே சன்ம மலடன் என்றொருகாலே—வசைகொண்டேன் தசரதன் புவிமேலே
கள்ளி ஆனது நெடுக வளர்ந்ததாலே—காயுண்டோ கனியுண்டோ அதுபோலே பிள்ளை.

சரணம்

1. மறுவில்லாத இந்தச் சூரிய வங்கிசமிது—வளரும் வங்கிசம் ஆச்சே யிது
மழைபெய்தடி மறைந்தாற்போலே என்—மட்டிலே நின்று போச்சே
அறுபதாயிரம் வருடமும் வருந்தும்—அரசுதான் இனி ஆரைக்கொண்டு திருந்தும்
குறைவில்லாத அந்தச் சஞ்சீவி மருந்தும்—கொடுக்கும் தெய்வம் நீதானே கிடைத்திருந்தும்
பிள்ளை.

2. பெருக்கக் காண்பதே காண்பதல் லாமல்—பெறுவ தொன்றுங் காணேன் மிகு
பிச்சர்போ லேநெடு நாளும் உண்ட உண்ட—எச்சிலை உண்ணல் ஆனேன்
விருத்தன் நான் இனித் தவசிலே செல்ல—வேணும்அல் லாமல்புவி ஆள்வது சிறப்பல்ல
இருத்தும் வாழைஅடி வாழைஆய்ப் புல்ல—இவன்மகன் இவன்ஆம் என்றுபேர் சொல்ல
பிள்ளை.

3. மோந்தால் முத்தியும் வரும் பரத்திலே—முத்தியுங் கூட வருமே மேலே
சாய்ந்தால் உடம்பெங்கும் குளிருமே—தழுவஇன்பம் தருமே
வாய்ந்த பொன்னுல களவும் போய்ச்சனி—மண்டல முந்திருத் திக்கொண்டேன் புவிதனில்
ஏந்தினேன் இல்லையே ஒருபிள்ளைக்கனி—என்னவீ டென்ன வாசல் எனக்கினி பிள்ளை.

---

; - * ச்ா ; ச்ா - ச் நி . த நி . ச்ா ச்ா | ; - நி ச் நி த் தா - | தா நி . த பா பா ||
. - கள் . ளி - ஆ . . . ன து | . - நெ டு . க வ - | ளர் ந்த . தா லே

; - * ம க மா மா ; - ம . க மா பா | ; - ப . த பா பா - | மா க் ம க் ரி சா ||
. - கா . யுண் டோ . - க னி யுண்டோ | . - அ து போ . - | லே . . . . .

; - * " பிள்ளை யில்லாத " பல்லவியின் 2-வது சங்கதியைப் பாடி நிறுத்தவும். ||
. -

ச. ; - * ச நி சா - ரி ; ரி - ரி ரி | ரி ம பா - த நி பா | த ப ம க ரி சா ||
. - ம று வி - லா . த - இந் தச் | சூ . . - ர்ய . வங் | கி . ச . மி து

; - * ரி ரி க் . ம . க் ரி - ரி க் சா சா சா | ; - சா , நி த நி | சா ச நி ரி சா ||
. - வ ள ரு ம் . . - வூ ங் . கி சம் | . - ஆ . . . ச் | சே . . யி து

; - * ச ரி மா ; - க ம பா - த ப பா | ; - ப ம நி த த ப | த ப ம க ரி க சா ||
. - ம ழை பெய் . - த . டி - ம . றைந் | . - தா . . . . ற் | போ . . . லே . என்

க் - * ரிக் மா - மபக்ாக் ரிக் ரிக் ச சா | ; - சா , நி தநி | ச நி தநி ச நி சா ||
. - மட்டி - லே . . . . . . . . நின்று . - போ . . . . . . . ச் சே . .

ச ரி ம மா ம மா , - க ம ப த . ப ப ப - | ப தச் ச்சா நித்தா | பா ம க . ரிரி க க ||
அறுபதாயிரம் . - வருஷமும் வருந்தும் - அரசு தான் இனி ஆரைக்கொண்டுதிருந்தும்

ரி ரி ரி - க் மக் ரி ச - சா நி தநி - ச ச ச - | ச ரி ம க ம ப த ப | தச் த ப ம க ரீ ||
குறைவி-லா . த அந்தச்-சஞ்சீ . வி - மருந்துங் - கொடுக்குந் தெய்வமும் நீ . தா . னே கிடைத்திருந்

{க ச- * / தும்-} "பிள்ளை யில்லாத" பல்லவியின் 2-வது சங்கதியைப் பாடி நிறுத்தவும். ||

✢ இக்குறி சாதாரண காந்தாரத்தைக் குறிக்கும்.

# 5

*கலைக்கோட்டு முனிவரால் மகவேள்வி (புத்திரகாமேஷ்டி) செய்து முடித்த பின்பு, வைகுந்த நாதனாகிய திருமாலே இராமனாகத் தம்பியர் மூவருடன் அவதரித்தமை கூறப்படுகின்றது.*

---

**இராகம் : கௌளிபந்து** — ஆ. : ச ரி மா ப நீ ச் — { 15-வது மேளத்திற் பிறந்தது.

**தாளம் : ஆதி** — அ. : ச் நி த ப ம் ப த ம க ரி ச

பல்லவி

பரப்பிரம்ம சொரூபமே ஸ்ரீராமன் ஆகப்—பாரில் வந்தது பாரும் — பரப்.

அநுபல்லவி

வரத்தினால் அரக்கரை வானத்தில் ஏற்றவும்
வானத்தில் தேவர்கள் மலர்மாரி தூற்றவும் — பரப்.

சரணம்

1. பக்தி முனிவன்கலைக் கோட்டு மாமுனி—பண்ணிய யாக பலன்தேறச்
சத்திய தசரதற் கறுபதி னுயிரம்—சம்வத் சரபலன் நிறைவேறச்
சித்திரை மாதம் நவமி கடகம்—செழும்புனர் பூசம் தேன்ஊற
ஒத்த கிரகங்கள் நால்வரும் பதினொன்றில்—உச்சத்தில் ஐவரும்ஏற ஆதிப் பரப்.

2. சீர்ஆரும் லட்சுமணன் சத்ருக் னன்சுமித்—திரைவயிற் றில்நின்று பேரப்
பாரோர் புகழ்கை கேசி வயிற்றில்நின்று—பரதன் வந்துபுவி சேர
ஆராலுங் கொள்ளாத ஆனந்தம் மேற்கொண்டு—அம்புவி யோர்இடர் தீரக்
காராரும் குழல்வல்லி இருவர்க்கும் மேலான—கௌசலை கண்களி கூர ஆதிப் பரப்.

3. தேவர் முனிவர்பகை தீர்ந்தோம் என்று—சென்னியில் பூந்துழாய் முடிக்கப்
பூவுல கத்துள வேதியர் எல்லோரும்—புகழும் வேதாகமம் படிக்கப்
பாவி இலங்கையின்மேல் சூரியன் தேரிலுள்ள—பச்சைப் பரிஏழும் நடிக்க
ராவணன் ஆதி இருக்கின்ற ராட்சதர்—எவர்க்கும் இடக்கண்கள் துடிக்க ஆதிப் பரப்.

---

| ப. ; | - * ப ப சா சா - ரீ ரீ ரீ ரீ | ; - ச நி சா ரீ - | சா , நி க ரி சா || |
|---|---|---|---|
| | - ப ர ப்ர ம்ம - சொ ரூ ப மே | . - ஸ்ரீ . ரா . ம - | ஞ . . . . கப் |

2. ; -* ப ப சா சா - ரீ ரீ ரீ ரீ | ; - ச ரி ம ப த ம | க ரி க ரி சா சா ||
. - ப ர ப்ர ம்ம - சொ ரூ ப மே . . - ஸ்ரீ . ரா . ம . ஞ . . . . கப்

3. ; -* ப ப ச நி ச்ா - ரீ மா பா த ம | க ரி - ச நி க ரி சா - | சா ச நி பா நீ சா ||
. - ப ர ப்ர ம் ம - சொ ரூ ப மே . . . - ஸ்ரீ . ரா . ம - ஞ . . . . கப்

; -* ச ரி மா ; - ப நி ச்ா ரி நி த ப - | ம ம த ம க ரி க ரி | சா ; ரி க ரி ச நீ ||
. - பா . ரில் . - வ ந் . த . து . - பா . . . . . . . . ரும் . . . . . . .

{ ; -* ப ப சா சா - ரீ ரீ ரி ச ரீ | ; ; ; - ச நி | க ரி சா ; ; } ||
{ . - ப ர ப்ர ம்ம - சொ ரூ ப . மே . . . . - . . . . . . . }

அ. ப. ; -* ப ம பா நீ - ச்ா ச் நி ரி ச் ரீ | ; - ச் நி க் ரி ச்ா - | ச்ா ரி நி ச்ா ச்ா ||
. - வ ர த் தி ஞல் - அ ர க் க . ரை . . - வா . ன த் தில் - ஏ . ற் று வும்

1. ; -* ச்ா ச்ா ச்ா - ச் நி ச் ரி நி த பா - | பா ச் நி தா பா - | ப ம த ம க ரி க ரி ||
. - வா னத் தில் - தே . . . . வர் கள் - ம ல ர் மா ரி - தூ . . . . . . . ற்ற .

## 6

*விசுவாமித்திர முனிவர், தசரத மன்னரிடம் சென்று, தாடகையால் தடைசெய்யப்பட்ட தமது வேள்வி முற்றுப்பெறுதற்கு உதவி செய்யும்படி இராமபிரானைத் தருமாறு கேட்டல்.*

**இராகம் : மோகனம்** — ஆ. : ச ரி க ப தா ச் — அ. : ச் தா ப கா ரி சா — 28-வது மேளத்திற் பிறந்தது.

**தாளம் : ரூபகம்**

பல்லவி

*ராமனைத் தருவாய் சகரட்சக—ராமனைத் தருவாய் ராமனை.*

அனுபல்லவி

*தாமதம் நீ செய்யாதே—தசரதா இப்போதே ராமனை.*

சரணம்

*1. அரன் பக்கம் செல்வேன்—அரி முன்னே சொல்வேன்*
*இரண்டுந் தப்பினுல் உனைவிட்—டெவரால் பகை வெல்வேன் ராமனை.*

2\. தாடகைப் பாவி—தவிர்த்தாள் என்வேள்வி
பீடை வராமல் காத்தால்—பிழைக்கும் என்ஆவி — ராமனை.

3\. உம்பர் விசாரம்—ஒழிக்க அந்நேரம்
சம்பரனைக் கொன்ருயே—தயவாய் இந்நேரம் — ராமனை.

4\. கோபத்தில் ருத்திரன்—குருவிசுவா மித்திரன்
ஆபத்துக் காக்கவேணும்—அதனுல் உன்புத்திரன் — ராமனை.

---

ப. கா ; = கா ரீ ரீ கா | பா ; = ; ப க ப த ச் ச் ||
ரா . மனைத் த ரு வா . ய் ச க ர ட் ச க

ச் த ச் த = த ப கா , த பா | ரீ ; = சா , ப க ரி ச ரி . ||
ரா . . . ம . னைத் த ரு வா . . ய் . . . . .

2\. கா ; = க ப க ரீ ரி கா | பா ; = ; ப க ப த ச் ரி ||
ரா . . ம . னைத் த ரு வா . ய் ச . க ர ட் ச க

2. க்ா ரி ச் = , ச் ரி ச் த ப தா | ச் ச்ா த = பா த ப க ரி சா ||
தா ம தம் , நீ செ ய் யா . தே த ச ர தா இ ப் போ . தே

3. க்ா ரி ச் = , ரி ச் த ச் ப தா | ரி ரீ ச் = த ப த ப க ரி சா ||
தா ம தம் . நீ செ ய் யா . தே த ச ர தா . இ ப் போ . தே

4. க்ா ரி ச் = ரி க்ப் க் ரி ச் த ப த | க் ரீ ரி = ச் த த ப க ரி ச ரி ||
தா ம த ம் நீ . செய்யா . தே . த ச ர தா . இப் போ . . . தே

கா ; = கா த ப ரி ரி கா | ப க ப த = ச் ரி க் ப் க் ரி ச் ரி ||
ரா . ம னே . த் த ரு வா . . . . ய் ச க ர ட் ச க

{க் ரி ரி ச் = ச் த த ப க த பா | ரீ ; = சா ; ; ; . . } ||
{ரா . . . ம . னே . த் த ரு வா . . . . ய் .

ச. க க கா = கா கா கா க ரி | ரி க தா = பா க ப க ரி சா ||
அ ரன் பக் கஞ் செல் வே . ன் அ ரி முன் னே சொ ல் வே . ன்

க ப க ரி = ச ரி க ப ரீ சா | ரீ ச த = சா . பு து சா ச்ா ||
இ ரண் டு ந் த ப்பி ஞ லுன்னே விட் டெ வ ரால் பகை வெல் வேன்

கா கா = ரி க ப பா , க | ப த ச்ா = ச் த ச்ா ச்ா ; ||
தா ட கைப் பா வி . த வி ர்த் தாள் எ ன் வேள் வி . .

க்ா க் ரி = ச்ா ச் த த ப தா | ச் ச்ா த = பா க ப க ரி ச ரி ||
பி டை வ ரா ம ல் கா த் தால் பி ழைக்கும் என் ஆ . . . வி .

கா ; = கா த ப ரி ரி கா | ப க ப த = ச் ரி க் ப் க் ரி ச் ரி ||
ரா . ம னை . த் த ரு வா . . . . ய் ச க ர ட் ச க

{ க் ரி ரி ச் = ச் த த ப க த பா | ரீ ; = சா ; ; ; } ||
{ ரா . . . ம . னை . த் த ரு வா . . . ய் }

# 7.

*இராமன் படைப்பயிற்சி பெறாத இளம்பிள்ளையாதலால் அவன் இருக்கட்டும். யானே உம்முடன் வருகின்றேன். தாடகையென்னும் அரக்கிமாத்திர மன்று. தேவர்களே வந்து தடுத்தாலும் அவர்களையும் வென்று உமது வேள்வியைக் காப்பேன் என்று தசரதன் விசுவாமித்திரரிடங் கூறுதல்.*

---

**இராகம்:** ஸ்ரீ | ஆ: ச ரி ம ப நி ச் | 22-வது மேளத்திற்
**தாளம்:** திரிபுடை | அ: ச் நி ப ம ரி கா ரி ச | பிறந்தது

பல்லவி

**ராமன் ஏதுக்கு இதற்கோ அவன் வரவேணும்—நான் வருகிறேன் காணும் ராமன்.**

அனுபல்லவி

**பூமிஅரசன் என்றுநான் இருந்தென்ன கொள்ளை—சாமி அவன்ஏந்து குழந்தைப்பிள்ளை ராமன்.**

சரணம்

**1. ஏன் இந்தத் தோத்திரம் தாடகை—எனக்கெம் மாத்திரம்**
**வானுளோர்கள் வந்து தடுத்தாலும் அடிக்கிறேன்—நானேவந்துன் வேள்வியை**
**முடிக்கிறேன் ராமன்.**

2. பேயைக் கொல்வ தரிதோ காரியம்—பெரிதோ வீரியம் பெரிதோ
ஆயுதம் பிடித்தறியான் கேளாய் ஒருசொல்லை—வாயில்முலைப்பால் மணம்மாற இல்லை ராமன்.

3. கவலை ஏன் கொண்டாய் என்முன் ஒருக்—காலும் வரான் கண்டாய்
அவளையும் படையையும் அடிக்கிறேன் பாராய் பாராய்—இவனுல் என்ன எழுந்திரு
வாராய் வாராய் ராமன்.

---

ப. ; ச நி சா | ரீ ; | கா ரீ || ; ரி ம பா | நி நி ப ம | ரி க ரீ ||
. ரா . மன் ஏ . துக் கு . இ தற் கோ அ . வன் . வ ர

; ச ரி க ரி | சா ச நி | பா பா || ; ச நி சா | ரீ ப ம | ரீ கா ||
. வே . ண்ணு ம் நான் வ ரு கி றேன் . கா . . ணும் . . . .

2. ரிச ச நி சா | ரீ ; | கா ரீ || ; ரி ம ப நி | ச் நி ப ம | ரி க ரீ ||
. . ரா . மன் ஏ . து க்கு . இ தற் கோ . அ . வ ன் . வ ர .

; ச ரி க ரி | சா க ரி | ச நி பா || ; நி ச ரி ம | ப த நி ப | ம ரி க க ||
. வே . ண்ணு ம் நான் வ ரு கி . றேன் . கா . . . ணும் . . . . . .

{ ரிச ச நி சா | ரீ ; | க க ரீ || ; க ரி ச நி | பா ச நி | சா ; } ||
{ . . ரா . மன் | ஏ . | துக் கு || . . . . . . | . . . | . . }

அ.ப. ரீ மா பா | நீ ப ம | ரி ச ரி ம || பா நி நி ப ம | பா ச் நி | ச்ா ச்ா ||
பூ மி அ | ர ச ன் | என் று . || நான் இ . ருந் | தென் ன . | கொள் ளை

ரீ மா பா | ச் நி ப ம | ரி க ரி ச || ம ரி ப ம நி ப | ச் நி ப நி | ச்ா ச்ா ||
பூ மி அ | ர . ச ன் | என் று . . || நான் இ . . ருந் | தெ ன் ன . | கொள் ளை

நி ரிச் நி ப ம | பா தநிப மரீ | கா ரி ச || ரி ம ப நி ச் ரி | க் க் ரி ரி | ச் நி ச்ா ||
பூ . மி . அ . | ர . . ச ன் . | என் று . || நா ன் இ . ருந் | தெ ன் ன . | கொ ள் ளை

ரீ க் ரி ச்ா | ச் நி பா | ச் நி ச்ா || க் ரி ச் நி பா | நீ ப ம | ரீ க க ||
சா ; . மி | அ . வன் | என து || ஏ . . ந் து | கு ழ ந் | தைப் பி ள்

{ ரிச ச நி சா | ரீ ; | க க ரீ || ; க ரி ச நி . | பா ச நி | சா ; } ||
{ ளை . ரா . மன் | ஏ . | துக் கு || . . . . . . | . . . | . . }

